

# பகவத் பாதை தமிழ் மாத இதழ்

"ஆன்மிக சாதனைகள் அனைத்தும் உன்னை கடைசி கதவு வரை மட்டும் கூட்டி செல்லும். ஆனால் விசாரத்தால் மட்டுமே அந்த கடைசி கதவு திறக்கும். மெய்ப்பொருள் தரிசனம் கிடைக்கும்." இப்படி ஆன்மிக சாஸ்திரங்கள் கூறுகின்றன.

அக உணர்ச்சிகளை நிர்வாகம் செய்வது தவறானது என்பதை விசாரித்து புரிந்து கொள்வதுதான் உண்மையான விசாரம். அது தான் ஞானம். இதுதான் ஆன்மிகத்தின் கடைசி கதவு.

– ஸ்ரீ பகவத்

## ஞான உறுதி முகாம்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

**ஞானப்புரிதலை புரிந்துகொள்வது எவ்வளவு முக்கியமோ அதைவிட பலமடங்கு முக்கியமானது புரிந்து கொள்ள வேண்டியவற்றை புரிந்துகொண்டோம் என்று உறுதி செய்துகொள்வது.**

ஐயா வழங்கும் ஞானப் புரிதல் நமக்குள் வெறும் கருத்தாக மட்டும் பதிவதால் பயன் ஏதும் இல்லை. அந்தப் புரிதல் நம்மால் கண்டுபிடிக்கப்பட்ட உண்மையாக மாற வேண்டும். அப்போதுதான் அது நமக்கு விடுதலையைக் கொடுக்கும்.

இதற்காக சிறப்பு ஞான உறுதி முகாம் (Enligletement Confirmation Camp) நடைபெற உள்ளது.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பக்காடு, பெரியகவுண்டாபுரம், சேலம்-636 106.

நாள் : **12.10.2018 மாலை 6.00 மணிமுதல் 14.10.2018 மதியம் 3.00 மணிவரை**

செலவுப் பகிர்வு **ரூ. 3000**/- நபர் ஒருவருக்கு

**இந்த சிறப்பு ஞான உறுதி முகாமில் கலந்து கொள்வதற்கான தகுதிகள் :**

1. ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்களில் குறைந்தபட்சம் 2ல் கலந்திருக்க வேண்டும்.
2. **ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்** என்ற நூலினை படித்திருக்க வேண்டும்.

**மேற்கண்ட நிபந்தனைக்கான காரணம் :**

முதல் முறையாக ஞானமுகாமில் பங்குபெறுவர்களிடமும் பகிர்ந்துகொள்ள முடியாத பல விசயங்களையும் நடைமுறை யதார்த்த உண்மைகளையும் இந்த சிறப்பு ஞான முகாமில் பகிர்ந்து கொள்ளப் போகிறோம். இவை மேற்குறிப்பிட்ட தகுதியானவர்களுக்கு ஞானத்தை உறுதி படுத்துவதற்கும், தேடுதலை நிறைவு செய்து விடுதலை பெறுவதற்கும் பேருதவியாக இருக்கும். ஆனால் புதிய அன்பர்களுக்கு குழப்பத்தை ஏற்படுத்திவிடும் என்பதால் தவிர்க்கிறோம். அதனால் இந்நிகழ்ச்சியை **Youtube** லும் வெளியிட மாட்டோம் என்பதை தெரிவித்துக்கொள்கிறோம்.

30 அன்பர்கள் மட்டுமே கலந்துகொள்ள முடியும். முன்பதிவு அவசியம்.

### முன்பதிவு செய்யும் வழிகள்

**M.O, D.D. (or) Cheque :**

வரைவோலை அனுப்புபவர்கள் A/c Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :**

நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம்.

**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem**

**ஸ்ரீ பகவத் மிஷன்**

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3.

கைப்பேசி : 9994205880, 97891 65555

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet, Salem - 636 003. Tamilnadu India

V.A.P. SHARAVANAN - 99942 05880

Dr. N. KAILASAM - 94432 90559

K.S. JEEVAMANI - 97891 65555

www.sribagavathmission.org

www.sribagavath.org

E-mail : sribagavathmission@gmail.com

This book Designed by

SRI ESPARI GRAPHICS, Salem-3.

Cell : 90926 46260, 98651 34075

விசாரணை

# ஆன்மிகத்தின் கடைசிக் கதவு


- ஸ்ரீ பகவத்

அது நான் ஆன்மிக அனுஷ்டானங்கள் பலவற்றில் ஈடுபட்டுக் கொண்டிருந்த காலம்.

பொதிகை மலைத் தொடரில் அத்ரி மகரிஷி தபோவனம் என்று ஒரு கோயில் இருந்தது. அங்கு எனது நண்பர் ஒருவருடன் அனுஷ்டானத்துக்காகத் தங்கியிருந்தேன்.

அந்தக் கோயிலை ஒட்டிய மலைப்பாதையில் குகை ஒன்று இருந்தது. அந்தக் குகையை முஸ்லீம் மதத்தைச் சேர்ந்தவர்கள் பள்ளிவாசலாகக் கருதி வழிபாடுகள் செய்து வந்தார்கள். அந்தப் பள்ளிவாசலுக்கு முஸ்லீம் துறவி ஒருவர் தவம் செய்ய வருவார் என்று கூறினார்கள். அவரைச் சந்திக்க வேண்டும் என எண்ணிக் கொண்டிருந்தேன்.

அன்று இரவு அவரே என்னைத் தேடிக் கொண்டு நான் தங்கியிருந்த கோயிலுக்கு வந்து விட்டார். பேசிக் கொண்டிருந்தோம்.

"இரவு எத்தனை மணிக்குத் தூங்குவீர்கள்?" என்று அவர் என்னைப் பார்த்துக் கேட்டார்.

அக்காலத்தில் நான் இரவு ஒன்பது மணிக்கெல்லாம் தூங்குவது வழக்கம்.

அதை அவரிடம் கூறினேன்.

அவர் அன்றைய நாளில் என்னை விட நாலைந்து வயது மூத்தவராக இருந்தார்.

அவர் ஆதங்கத்துடன் என்னைப் பார்த்துச் சிரித்தவாறே ஒரு சகோதர வாஞ்சனையுடன் கூறினார்.

"அய்யோ! அப்படியெல்லாம் இரவில் தூங்கிவிடக் கூடாது. இரவுதான் நமக்குச் சொந்தமானது. நமது சாதனைகளையெல்லாம் இரவில்தான் செய்து முடிக்க வேண்டும்."

அவர் எங்களிடம் விடை பெற்றுக் கொண்டு அந்தக் குகைக்குப் போய்விட்டார்.

அவர் போன பிறகு நானும் எனது கண்களை எனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர முயன்றேன். ஆனால் தூக்கக் கலக்கத்தில் கண்கள் சொருகிக் கொள்ள ஆரம்பித்து விட்டன.

இது போல் இரமண மகரிஷியிடம் ஒருவரை அறிமுகம் செய்து வைத்தார்கள். "இவர் காலையும் மாலையும் தவறாமல் தியானங்களில் ஈடுபடுவார்" என்று அவரைப்பற்றி உயர்வாகக் கூறினார்கள்.

அதற்கு இரமண மகரிஷி சிரித்துக் கொண்டே, "ஆன்ம ஞானம் என்றால் கடையில் வாங்கக் கூடிய கத்தரிக்காயா என்ன? டைம் டேபிள் போட்டு ஆன்ம ஞானத்தை அடைந்து விட முடியுமா? அஹோராத்ரம் -இரவு பகலாகப் பாடுபட்டால்தான் அது கிடைக்கும்" என்று கூறினார்.

இராமகிருஷ்ண பரமஹம்சரை எடுத்துக் கொண்டால் அவர் நம்மைத் தண்ணீருக்குள்ளேயே அமிழ்த்தி வைத்து விடுவார்.

"தண்ணீருக்குள் அமிழ்த்தப்பட்ட ஒருவன் மூச்சுக் காற்றுக்காக எவ்வளவு தீவிரம் காட்டுவானோ அவ்வளவு தீவிரம் காட்டினால்தான் இறை தரிசனம் உனக்குக் கிடைக்கும்" என்று அவர் கூறுவார்.

இவர்கள் அனைவரும் என்ன சொல்ல வருகிறார்கள்?

"ஆன்மிகத்துக்காக ஓடு! ஓடு! என்று நம்மை ஓட வைத்து விடுகிறார்கள்.

ஆன்மிகத்துக்காக ஓடி ஓடிப் பாடுபட்டுத் தேடிக் கொண்டிருப்பவர்கள் அதிரும்படியாக

நமது ஆன்மிக சாஸ்திரங்கள் இன்னுமொரு அணுகுண்டைத் தூக்கிப் போட்டு விடுகின்றன.

அப்படி என்ன கூறுகின்றன?

"ஆன்மிக சாதனைகள் அனைத்தும் உன்னைக் கடைசிக் கதவு வரை மட்டும் கூட்டிச் செல்லுமே அல்லாது, கடைசிக் கதவைத் திறந்து மெய்ப்பொருளைக் காட்டாது. விசாரத்தால் மட்டுமே விசாரணையினால் மட்டுமே அந்தக் கடைசிக் கதவு திறக்கும். மெய்ப்பொருள் தரிசனம் கிடைக்கும்."

இப்படிக் கூறி விடுகின்றன.

ஆன்மிக சாதனைகள் அனைத்தையும் தாண்டி வருவது தான் விசாரம் என்ற இந்த விசாரணை.

விசாரணை என்றால் விசாரித்துப் பார்ப்பது என்று பொருள்.

நாம் எதனை விசாரிப்பது? எப்படி விசாரிப்பது?

ஆன்ம சாதனைகளையும் விட உயர்வான தன்மையில் அப்படி என்ன இந்த விசாரணையில்

உள்ளது?

இந்த விசாரணையை எவ்வளவு காலம் செயல்படுத்த வேண்டும்?

ஆன்ம சாதனைகளில் ஈடுபடுவதையே அஹோராத்ரம் - அல்லும் பகலுமாகச் செய்ய வேண்டுமென்று கூறுகிறார்கள்.

பிறகு இந்த விசாரணையை எப்படி மேற்கொள்வது?

அல்லும் பகலுமா?

எவ்வளவு காலத்துக்கு?

கோவிலில் பூஜை செய்த சாது ஒருவரைப் பற்றி ஏற்கனவே பிரிதொரு கட்டுரையில் கூறியிருக்கிறேன்.

முப்பது வருடங்களுக்கு முன்னால் நடந்த சம்பவம். அப்போது எனக்கு வயது சுமார் 40 இருக்கும். திருச்செந்தூர் கடற்கரையிலிருந்து ஜீவசமாதிக் கோயில் ஒன்று எனது பொறுப்பில் இருந்தது.

வழக்கமாக பூஜை செய்பவர் விடுப்பில் இருந்ததால், அந்த ஆலயத்தில் தங்கியிருந்த சாது ஒருவர் தற்காலிகமாக பூஜை செய்து வந்தார். அவர் தனது கதையைக் கூறினார்.

"ஞானத்தைத் தேடி நான் எனது பதினாறாவது வயதில் வீட்டை விட்டு வெளியே வந்து விட்டேன். எத்தனையோ மடங்களுக்குச் சென்று விட்டேன். எத்தனையோ தவ தியானங்களைச் செய்து விட்டேன். இப்போது எனக்கு 80 வயதாகிறது. இன்னும் அந்த ஞானம் எனக்குக் கிடைக்கவில்லை. இன்னும் அதனைத்தான் தேடிக் கொண்டிருக்கிறேன்", என்று அவர் கூறினார்.

ஆற்றாமையினால் அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடின.

அவரைக் கண்டு எனக்குப் பரிதாபம் ஏற்படவில்லை. பயம் தான் ஏற்பட்டது.

பயம் ஏற்பட்டதற்கான காரணம் ஒன்றும் இல்லை.

"அவர் 16 வயதிலிருந்து தேடுதலில் ஈடுபட்டுள்ளார். நான் 18 வயதிலிருந்து தேடிக் கொண்டிருக்கிறேன். 80 வயதாகியும் அவருக்கு இன்னும் கிடைக்கவில்லை. எனக்கு 40 வயதுதான் ஆகிறது. இன்னும் ஞானம் கிடைக்கவில்லையே என்ற வருத்தத்தில் இருக்கும் நான் இன்னும் எத்தனை காலந்தான் இப்படித் தேடி அலைய வேண்டும்?" என்ற மலைப்பு தான் எனக்கு அத்தகைய பயத்தை ஏற்படுத்தியது.

இப்படி ஒரு நீண்ட சாதனைக்குப் பிறகு "விசாரம்" என்ற இரண்டாவது கட்ட சாதனையை வேறு ஆரம்பிக்க வேண்டுமா?

நீங்கள் இந்தியாவில் இருப்பதாக வைத்துக் கொள்வோம். உங்களுக்கு அமெரிக்கா செல்ல வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

நீங்கள் இருப்பது இந்தியா, செல்ல வேண்டியது அமெரிக்கா. இந்தியாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடையில் ஆயிரக்கணக்கான கிலோமீட்டர் இடைவெளி உள்ளது.

நீங்கள் உங்கள் பிரயாணத்தைத் திட்டமிட வேண்டும். அதை நீங்கள் செயல்படுத்த வேண்டும்.

இதற்குக் கால அவகாசம் தேவைப்படுகிறது. பயணம் தேவைப்படுகிறது.

இந்த உதாரணத்தை இன்னும் ஒரு வகையாக மாற்றிப் பார்ப்பதாக வைத்துக் கொள்வோம்.

இந்த உதாரணத்திலும் நீங்கள் அமெரிக்கா செல்ல முடிவெடுக்கிறீர்கள்.

இப்போது நீங்கள் எங்கே இருந்து கொண்டிருக்கிறீர்கள்? எங்கே இருந்து நீங்கள் அமெரிக்கா செல்ல வேண்டும்?

அமெரிக்காவிலிருந்து கொண்டே நீங்கள் அமெரிக்கா செல்ல விரும்புவதாக வைத்துக் கொள்வோம்.

இங்கு என்ன முயற்சி தேவை? எந்த வாகனத்தில் நீங்கள் பயணிக்க வேண்டும்?

நீங்கள் எங்கே இருக்கிறீர்களோ அங்கே செல்வதற்கு எந்த வாகனமும் தேவையில்லை எந்தப் பயணமும் தேவையில்லை.

அமெரிக்காவில் தான் நீங்கள் இருக்கிறீர்கள் என்பதை நீங்கள் புரிந்து கொண்டால் மட்டும் போதும்.

அமெரிக்காவில் இருப்பதை நாம் புரிந்திருக்காத பட்சத்தில், நாம் எங்கே இருக்கிறோம் என்பதை விசாரித்துதான் புரிந்து கொள்ள வேண்டும்.

இருப்பதைப் புரிந்து கொள்வதற்குப் பெயர்தான் "விசாரம்" அல்லது "விசாரணை".

அப்படியானால் நாம் அனைவரும் அடைய வேண்டியதை அடைந்துவிட்ட நிலையில்தான் இருக்கிறோமா?

அடைய வேண்டியதை நாம் ஏற்கனவே அடைந்து விட்டிருந்தால் அத்தகைய திருப்தி உணர்வு எதுவும் நமக்கு ஏற்பட்டிருக்கவில்லையே?

விசாரத்தால் நாம் எதனைத் தெரிந்து கொள்ளப் போகிறோம்?

ஆன்மிகத்தின் உயர்ந்த நிலையாகக் கருதப்படுவது ஞானமல்ல. முக்தி என்பதுதான் உயர்ந்த நிலையாகக் கருதப்படுகிறது. முக்தி, மோட்சம், விடுதலை என்று பல பெயர்களில் அந்த உயர்நிலையானது அழைக்கப்படுகிறது.

உடலோடும், மனதோடும் கூடிய ஒருவராக நம்மை அறிந்து கொள்வதை மயக்கம் என்றும் பந்தம் என்றும் சாஸ்திரங்கள் விவரிக்கின்றன.

நமது நிஜ சொரூபமானது உடலோடும், மனதோடும் கூடிய ஒன்றல்ல என்றும், நமது நிஜ சொரூபம் ஆன்மா என்றும் அறிந்து கொள்வதுதான் ஞானம் என்று விளக்குகின்றன.

அப்படி நாம் நமது நிஜ சொரூபத்தை அறிந்து கொள்வதால், உடலாலும், மனதாலும் ஏற்பட்ட பந்தங்களிலிருந்து நாம் விடுபட்டு விடுகிறோம். இதுதான் விடுதலை அல்லது முக்தி என்று கூறப்படுகிறது.

நமக்கு ஏற்படும் அத்தனை அனுபவங்களும் உடலாலும் மனதாலும் மட்டுமே ஏற்படுகின்றன. அந்த அனுபவங்கள் அனைத்தும் தற்காலிகமானவையே தோன்றி மறையக் கூடியவையே.

நாம் விரும்பும் அனுபவங்களைப் பற்றிப் பிடிப்பதும், விரும்பாத அனுபவங்களை விரட்டி அடிப்பதுமாகவே நமது வாழ்க்கை அமைந்துள்ளது.

நமக்கு ஏற்படும் அனுபவங்களை நிர்வாகம் செய்வதே நமது வாழ்க்கையாக அமைந்துள்ளது.

நாம் ஒரு மரத்தைப் பார்க்கிறோம்.

மரத்தின் உருவம் நமது கண்களில் பிரதிபலிக்கிறது. நாம் மரத்தை அறிகிறோம். இப்போது நமது கண்களை வேறு பக்கமாக திருப்புவதாக வைத்துக் கொள்வோம். மரத்தின் உருவம் நமது கண்களிலிருந்து மறைந்து விடுகிறது. இப்போது நமது கண்களில் புதிதாகப்பட்ட பசு மாட்டின் உருவம் தெரிய ஆரம்பிக்கிறது.

ஒரு பறவை தனது அழகிய குரலில் சப்தமிடுகிறது. அது நமது காதுகளில் எதிரொலிப்பதால் அதனை நாம் அறிகிறோம். அந்தப் பறவை தனது சப்தத்தை நிறுத்தியதும் நமது காதுகளில் ஒலித்த சப்தமும் மறைந்து விடுகிறது.

நமது அனைத்து புலன்களும் இவ்வாறுதான் செயல்படுகின்றன.

நமது புலன்களில் ஏற்படும் அனைத்து அனுபவங்களும், கணத்திற்குக் கணம் புதியதாகவே உள்ளன. பழைய அனுபவம் என்று எதுவும் கிடையாது.

நமது புலன்களில் ஏற்படும் அனுபவங்கள் யாவும் நமது மனதிலும் பிரதிபலிக்கின்றன. அந்த பிரதிபலிப்புக் கூட கணந்தோறும் புதியதாகவே உள்ளன.

மற்ற புலன்களில் இல்லாத ஒரே ஒரு வித்தியாசம் நமது மனதில் மட்டுமே உள்ளது. அது தான் memory நமது நினைவுத் தொகுப்பு.

நமது memory தான் நமது மன அனுபவங்களைச் சுதந்திரமாகத் தோன்றி மறைய விடாமல் செய்து விடுகிறது.

சில அனுபவங்களைத் தேர்ந்தெடுத்து பற்றிப் பிடிக்கிறது. சில அனுபவங்களை விரட்டியடிக்கப் போராடுகிறது.

மனதினுடைய இயற்கையான செயல்பாட்டுக்கு memory யின் நிர்வாகம் தேவையில்லை.

நமது புறச்செயல்களுக்கு memory யின் உதவியை வைத்துக் கொள்ளலாம்.

புலன் நுகர்ச்சிகள் அனைத்தும் நம்முடைய முயற்சி இல்லாமல், தாமாக நடைபெறுகின்றன.

தாமாக ஏற்படும் புலன் நுகர்ச்சிகளில் சுதந்திரம் உள்ளது. புதுமை உள்ளது.

அது தேங்கிக் கிடப்பதில்லை.

இதே தன்மைதான் நமது மனதுக்கும் சொந்தமானது.

ஆனால் அது தனது memory யின் காரணமாக சிலவற்றை நிர்வாகம் செய்ய முயன்று விடுகிறது.

மன அனுபவங்களை நிர்வாகம் செய்வதுதான் பந்தம். அதுதான் முக்திக்கு விரோதமானது.

நமது memory யைப் பயன்படுத்தி நமது புறச்செயல்களை நிர்வாகம் செய்துதான் ஆக வேண்டும்.

அக உணர்ச்சிகளை நிர்வாகம் செய்வது தவறானது என்பதை விசாரித்துப் புரிந்து கொள்வதுதான் உண்மையான விசாரம். அதுதான் ஞானம்.

அந்த ஞானம் ஒருவருக்கு ஏற்படும் பட்சத்தில் அவர் தனது மன உணர்ச்சிகளை அவை போக்கில் இயல்பாக விட்டு விடுகிறார். சுதந்திரமாக விட்டு விடுகிறார்.

அந்த மன இயக்கம் விடுதலை பெற்று சுதந்திரமாக இயங்குகிறது.

இந்த விடுதலைக்கு நாம் என்ன செய்ய வேண்டும்?

"அக உணர்ச்சிகள் சம்பந்தமாக நாம் எதையுமே செய்யத் தேவையில்லை" என்ற மிகச் சாதாரணமான புரிதலுக்கு தெளிவுக்கு வந்து விட்டால் மட்டும் போதும்.

இதுதான் ஆன்மிகத்தின் கடைசிக் கதவு.

உண்மையில் அங்கு கதவே கிடையாது.

ஆன்மிகப் பயிற்சி முயற்சிகளில் ஈடுபடுபவர்களைக் கலவரப்படுத்தி விடக் கூடாது என்பதற்காக

நிறைய படிக்கட்டுகளும், கதவுகளும் இருப்பது போலக் கதை புனைந்து விட்டார்கள்.

அந்தக் கதைகளிலிருந்தும் விடுபட்டு கதவற்ற பிரவாகமாக நம் மனதானது

மற்ற புலன்களைப் போல் சுதந்திரமாகச் செயல்படுவது தான் முக்தி.



# கேள்வி? பதில்...

**V.A.P. சரவணன்,** சேலம்.
செல் : 99942 05880

## உடலை வலுப்படுத்துவது போல் மனதை வலுப்படுத்த முடியுமா?

**கேள்வி :** நான் ஒரு கம்ப்யூட்டர் ஹார்ட்வேர் இன்ஜினீயர். எனக்கு வயது 36. திருமணமாகி இரண்டு குழந்தைகளுடன் இருந்து வருகிறேன். நான் சிறுவயது முதலிலிருந்தே எந்த விதமான உடற்பயிற்சியும் செய்யவில்லை. அதனால் எனது உடல் எடை 104 கிலோவை எட்டியது. பல உடல் உபாதைகள் ஏற்பட்டன. வேறு என்ன செய்வது என்று தெரியாத நிலையில் தான் "மலையேற்றம் உடல் ஆரோக்கியத்தை கொடுக்கும்" என்பதை பல நண்பர்கள் மூலம் அறிந்து கொண்டு அதனை செயல்படுத்த தொடங்கினேன். எனது வீட்டிலிருந்து ஒரு மூன்று கிலோமீட்டர் தூரத்தில் ஒரு மலை உள்ளது. நான் தினமும் காலை 4 மணிக்கு எழுந்து மலையேற்ற பயிற்சி செய்ய தொடங்கினேன். முதலில் இரண்டு மாதம் மிகவும் கஷ்டமாக இருந்தது. ஒரு நான்கு மாதத்தில் உடலின் தோற்றம், உடல் எடை என அனைத்துமே மாறிவிட்டது. தற்போது 77 கிலோ எடை உள்ளேன். மேலும் உடற்பயிற்சியும் செய்து ஒரு நேச்சுரல் சிக்ஸ்பேக் வடிவமும் உடல் பெற்றது. பயிற்சியை தினமும் தொடர்ந்து செய்து வருகிறேன். உடல் நிலையைப் பொறுத்தவரையில் நல்ல முன்னேற்றமும் கிடைக்கப் பெற்றேன். இரவு படுத்தவுடன் தூங்கி விடுகிறேன். அதிகாலை நான்கு மணிக்கெல்லாம் எழுந்து 7 மணிக்குள் பயிற்சியை முடித்து விடுகிறேன்.

உடல் நல்ல உறுதியோடும் ஆரோக்கியத்துடன் இருப்பதாக உணர்கிறேன். ஆனால் பிரச்சனை என்னவென்றால் நான் காரில் பயணிக்கும் பொழுது, நானே காரை ஓட்டும் போது எனக்கு எந்த பிரச்சினையும் இல்லை. எத்தனை மணி நேரம் வேண்டுமானாலும் ஓட்டிச் செல்லலாம். தொந்தரவு ஏற்படுவதில்லை. ஆனால் காரின் பின் சீட்டில் அமர்ந்தாலோ மற்றவர் ஓட்டும்போது அருகில் அமர்ந்தாலோ என்னால் ஒரு இருபது கிலோ மீட்டர் தூரம் கூட பயணம் மேற்கொள்ள முடியவில்லை. ஏசியை பயன்படுத்த மாட்டேன். காரின் கண்ணாடியை இறக்கி விடுவேன். காற்று சரியாக கிடைக்காதது போல் மனம் வருந்தும்.

உடனே தலைசுற்றல் ஏற்பட்டு மன பதட்டம் ஏற்பட்டு அதனைத் தொடர்ந்து வாந்தியும் வந்துவிடும். இருப்புக் கொள்ள முடியாமல் எப்படியாவது வண்டியிலிருந்து இறங்கி விடுவேன். இதனாலேயே கார், பஸ் என எதிலுமே என்னால் பயணம் மேற்கொள்ள முடியவில்லை. பெரும்பாலும் ரயில் பயணத்தையே மேற்கொள்கிறேன். இவ்வளவு பயிற்சி செய்து உடலளவில் வெற்றி பெற்ற எனக்கு, இந்த விஷயத்தில் மட்டும் என்னால் வெற்றி பெற முடியவில்லை. மனதையும் உடலைப்போல் உறுதிப்படுத்த நானும் பலவகைகளிலும் முயன்று வருகிறேன். உடலில் ஏற்பட்ட மாற்றத்தை போல் மனதில் என்னால் மாற்றத்தை கொண்டுவர முடியவில்லை. அது ஏன்? நான் இங்கு என்ன தவறு செய்கிறேன்? இதிலிருந்து மீள்வது எப்படி?

**பதில் :** நமக்கு இரண்டு விதமான இயக்கங்கள் உள்ளன. ஒன்று நமது உடல் இயக்கம், மற்றொன்று நமது மன இயக்கம் என இரண்டு வகையான இயக்கங்கள் உள்ளன. உடல் இயக்கத்தின் செயல்பாடு ஒரு வகை. மன இயக்கத்தின் செயல்பாடு என்பது உடலின் இயக்கத்தில் இருந்து முற்றிலும் வேறுபட்ட ஒரு வகை.

உடலின் இயக்கத்தை செயல்படுத்துவது போலவே மனதின் இயக்கத்தை செயல்படுத்த முடியாது. நீங்கள் முயற்சி செய்து உடல் எடையை குறைத்து வலு வாக்கியது முடியக் கூடிய ஒன்று. இதே அணுகுமுறையில் முயற்சி செய்து மனதை வலுப்படுத்தவும் சரிப்படுத்தவும் முடியவே முடியாது. மனதின் இயக்கம் உடலின் இயக்கத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டது.

எனவே மனதை எதிர்கொள்வது எப்படி என்பதை சிந்திப்போம். உதாரணமாக நாம் நம் உடலை திட வடிவமாகவும் மனதை திரவ வடிவமாகவும் எடுத்துக் கொள்ள வேண்டும். திட வடிவமான உடலை இயக்க இயக்க தான் உடல் ஆரோக்கியம் பெறும் - வலுப்பெறும். திரவ வடிவமான மனதை இயக்க முயற்சிக்கும்தோறும் அசைவு தான் ஏற்படுமே தவிர சமநிலையை ஒருபோதும் ஏற்படுத்த முடியாது. அதேபோல் மனதை இயக்க இயக்க போராட்டம் தான் ஏற்படுமே தவிர அமைதி ஒருபோதும் ஏற்படாது. உடல், மன இயக்கத்தை எளிமையான உதாரணத்தின் மூலம் புரிந்து கொள்வோம்.

ஒரு பாத்திரத்தில் 5 கிலோ தானியத்தை கொட்டுவதாக வைத்துக் கொள்வோம். அது ஒரு கூம்பு போன்ற வடிவம் பெறும். அதனை சமன் படுத்த நாம் என்ன செய்யலாம்? பாத்திரத்தை மேலும் கீழும் அசைப்பதன் மூலம் தானியம் சமநிலையை அடையும். இதே அணுகுமுறையில்தான் உடல் இயக்கம் செயல்படுகின்றது.

உடலை அசைத்தல் என்ற இயக்கத்தின் மூலம் உடலை சமன்பாட்டுக்கு கொண்டுவர முடியும். ஆரோக்கியத்திற்கு கொண்டு வரமுடியும். இதேபோல் ஒரு பாத்திரத்தில் 5 லிட்டர் தண்ணீர் ஊற்றுவதாக வைத்துக் கொள்வோம். தண்ணீர் தானியத்தை போல் ஒருபோதும் கூம்பு வடிவம் பெறாது. தண்ணீரின் அசைவு கொஞ்சம் கொஞ்சமாக குறைந்து தானாகவே சமநிலையை அடையும். தண்ணீரை சமநிலைக்கு கொண்டுவர நாம் எந்த

முயற்சியும் செய்ய முடியாது. செய்யத் தேவையுமில்லை.

நாம் தண்ணீரை சமநிலைப்படுத்த முயற்சி செய்வதுதான் தண்ணீரின் சமநிலையை குழைக்கிறது. நாம் எப்போது முயற்சியை கைவிடுகிறோமோ அப்போதுதான் தண்ணீர் தானாகவே சம நிலையை அடைகிறது. இப்படித்தான் நமது மன இயக்கம் நடைபெறுகின்றது.

நீங்கள் உடல் இயக்கத்தை உங்களின் முயற்சியால் உறுதி படுத்திருக்கிறீர்கள். இதே அணுகுமுறை மனதிற்கு எடுத்தது தான் தவறு. நீங்கள் காரில் பயணம் மேற்கொள்ளும் போது உங்களுக்கு ஏற்படுகின்ற பய உணர்வு மன இயக்கம் சம்பந்தப்பட்டது.

அதை சரி செய்ய நீங்கள் முயற்சி செய்தால்தான் அது அடுத்த கட்டமான தலைச்சுற்றல், மனபதட்டம், வாந்தி என்ற நிலையை அடைகிறது. இதிலிருந்து நாம் புரிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால் மனோ இயக்கம் சம்பந்தமாக நமக்கு எந்த வேலையும் இல்லை என்று புரிந்து கொள்வது மட்டுமே.

மனோ இயக்கம் சம்பந்தமாக நாம் முயற்சி செய்வதால் மட்டுமே அனைத்து பிரச்சினைகளையும் சந்தித்துக் கொண்டிருக்கிறோம். மன இயக்கத்தை சரி செய்ய வேண்டும் என்ற முயற்சியை கைவிடுவது மட்டுமே முக்கியம்.

அப்படியெனில் காரில் பயணிக்கும் போது ஏற்படும் பயத்தை என்ன செய்வது? பயத்தை ஏற்றுக் கொள்வதை தவிர நமக்கு வேறு எந்த வழியும் இல்லை என்று ஏற்றுக் கொள்வது ஒன்றே வழி.

மனோ இயக்கம் என்பது கணத்துக்கு கணம் தோன்றி மறைவது மட்டுமே அதன் இயற்கை. மன உணர்வுகளின் ஆயுள் அரை வினாடி நேரம் மட்டுமே. நாம் போராடுவதால் மட்டுமே அந்த உணர்வு வலுப்பெற்று, நீடிக்கிறது.

அப்படி நீடிப்பதால் உடலில் தேவையற்ற இரசாயண மாற்றத்தை ஏற்படுத்தி உடலையும் பாதிப்படைய செய்கிறது. உடல் இயக்கத்தின் ஆதாரம் கூட மன இயக்கம் தான் என்பதை புரிந்து கொள்ள வேண்டும். நமக்கு ஏற்படும் பய உணர்வை ஏற்றுக் கொள்வதாலும் அதன் சுதந்திரமான இயக்கத்தில் குறுக்கிடாமல் இருப்பதாலும் அந்த உணர்வு தொடர்ந்து நீடித்துக் கொண்டே இருக்கும் என்று அர்த்தமல்ல.

அதன் இயற்கையான இயக்கமே எப்படித் தோன்றுகிறதோ அப்படியே மறைந்து விடுவதுதான்.

நாம் குறிக்கிடாமல் இருக்கும்போதுதான் அதன் தாக்கம் நாளுக்கு நாள் குறைந்து முற்றிலும் இல்லாமல் போகும்.

**உடலை இயக்குவதன் மூலம் உடல் ஆரோக்கியம் பெறும். மன இயக்கத்தின் சுதந்திரத்தில் குறுக்கிடாத வரை – மனம் ஆரோக்கியம் பெறும்.**

## யோக சிகிச்சை – ஸ்ரீ பகவத் ஐயாவின் புதிய நூல்

மன இயக்கத்தை போலவே உடல் இயக்கத்தை புரிந்து கொள்வதன் மூலம் நோய்களிலிருந்து விடுபட்டு விரைவில் ஆரோக்கியம் பெறலாம் என விளக்கும் நூல்.

இந்நூல் சென்னை காமராஜர் அரங்கில் செப்டம்பர் இரண்டாம் தேதி நடைபெற்ற ஞான முகாமில் ஸ்ரீ பகவத் ஐயாவின் முன்னிலையில் **அக்கு ஹீலர் அ. உமர் பாரூக்** அவர்கள் வெளியிட **ஹீலர் பாஸ்கர்** அவர்கள் பெற்றுக்கொண்டார்.

இந்நூலை வாங்கி படித்து அனைவரும் பயன் பெற வேண்டுமாய் கேட்டுக்கொள்கிறோம். நூலின் விலை ரூ. 50/- மட்டும்.






# ஆசிரியர் பகுதி

K.S. ஜீவமணி
செல் : 97891 65555



அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

உலக மக்கள் அனைவரையும் நாம் இரண்டு வகைக்குள் பிரித்து விடலாம். முதலாவது மனதின் இயற்கையான இயக்கத்தின் உண்மையைப் புரிந்து கொண்டவர்கள். இரண்டாவது இந்த உண்மையைப் புரிந்து கொள்ளாதவர்கள். ஒட்டுமொத்த மனித குலமும் இந்த இரண்டு வகைகள் அடங்கிவிடுவார்கள்.

நாம் அனைவரும் இந்த உலகத்தையே மனதைக் கொண்டு தான் புரிந்து கொள்கிறோம். அப்படிப்பட்ட மனதின் இயக்க உண்மையை புரிந்துகொள்வதையே மெய்ஞானம் என்று குறிப்பிடுகிறோம். மனதின் இயல்பு ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமாகத்தான் இருக்கிறது. ஆனால் அதன் அடிப்படையான இயக்கம் - இயற்கையான இயக்கம் (Natural of mind) ஒரே மாதிரியாகத்தான் உள்ளது.

இந்த உண்மையைப் புரிந்து கொள்ளாதவர்கள்தான் தன் மனதோடு போராடுகிறார்கள். அகத்தில் தன்னை நிலைநிறுத்த முயற்சிக்கிறார்கள். புறத்தில் செயல்படுவது போலவே மனதை சீரமைக்கவும் போராடுகிறார்கள். மனதை சரி செய்வதற்காகவே புறத்திலும் பல காரியங்கள் செய்து வருகிறார்கள். மன போராட்டங்களுடனும் பிரச்சினைகளுடனும் வாழ்ந்து வருகிறார்கள்.

மனதின் உண்மையை புரிந்து கொண்டவர்கள் தம் மனதோடு போராடுவது இல்லை. அகத்தில் தன்னை நிலைநிறுத்த போராடுவதில்லை. புறத்தின் செம்மையான செயல்பாட்டிற்கு தன் அகத்தையே பயன்படுத்திக் கொள்கிறார்கள். அகத்தில் தன்னை இயற்கையோடு ஒப்புவித்து விடுதலையோடு வாழ்ந்து வருகிறார்கள். மனதின் இந்த இயற்கையான இயக்கத்தைப் பற்றிய உண்மையை புரிந்து கொண்டவர்களைத்தான் ஞானிகள் என்கிறோம்.

இதுவரை அடைவதற்கு அரிதாக இருந்த மெய்ஞ்ஞானம் ஸ்ரீபகவத் ஐயா அவர்களால் புரிதல் என்ற அறிவியல் ஆக்கப்பட்டு எளிமையாகி விட்டது. எனவே இதனை அனைவருக்கும் கொண்டு சேர்த்து இந்த உண்மையை புரிந்து கொண்டவர்களின் எண்ணிக்கையை அதிகரிப்பது நமது கடமையாக கொண்டு செயல்பட்டு வருகிறோம்.

அந்த வகையில் நமது மாபெரும் முயற்சியால் 1500 அன்பர்கள் கலந்து கொள்ளும் அளவு இடம் உள்ள சென்னை காமராஜர் அரங்கில் செப்டம்பர் 2ல் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் தன்னை அறியும் ஞான முகாம் ஏற்பாடு செய்திருந்தோம். இந்த ஞான முகாம் நாம் அனைவரும் எதிர்பார்த்ததைவிட பல மடங்கு சிறப்பாக நடைபெற்றது. இதில் 1800 அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைந்தனர். இந்த ஞான முகாமில் நமது பகவத் மிஷன் குடும்ப உறுப்பினரான மூத்த இசைக் கலைஞர் திரு. **G.S. மணி ஐயா** அவர்கள் ஸ்ரீ பகவத் ஐயாவை அனைவருக்கும் அறிமுகம் செய்து வைத்தார். **ஹீலர் பாஸ்கர்** அவர்களும் **அக்கு ஹீலர் அ. உமர் பாரூக்** அவர்களும் ஐயாவின் கருத்தோடு உடல்நலம் பற்றி உரையாற்றினார்கள். இன்ஜினியர் மற்றும் பேராசிரியரான **A.C. காமராஜ்** அவர்கள் உலக நலம் என்ற தலைப்பில் நவீன நீர்வழிச் சாலைத் திட்டத்தை விவரித்தார். டாக்டர் முனைவர் **G. அழகர் இராமானுஜம்** அவர்கள் ஞானமும் வாழ்வும் என்ற தலைப்பில் உரையாற்றினார்கள். ஞான முகாம் மிகவும் சிறப்பாக நடைபெறுவதற்கு எந்தவிதமான எதிர்பார்ப்பும் இன்றி மனிதகுலம் உயர வேண்டும் என்ற ஒரே நோக்கத்திற்காக தன்னலமற்ற நமது ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களின் சிறந்த செயல்பாடே முழு காரணம். நமது சிறந்த புறச் செயலுக்கு இந்த நிகழ்ச்சியே ஓர் உதாரணம். இதில் தொண்டாற்றுவதற்காக சென்னை மற்றும் வெவ்வேறு ஊர்களில் இருந்து கிட்டத்தட்ட நூறு தன்னார்வலர்கள் கலந்து கொண்டனர். மேலும் இந்த ஞான முகாமிற்காக ஆகும் செலவுகளை எதிர்கொள்ள பலரும் நன்கொடைகளை வழங்கி இருந்தனர்.

மேலும் இந்த ஞான முகாமின் உணவுக்கான மொத்த செலவையும் திரு. **சம்பந்தம் ஐயா** திருமதி **வடிவம்மாள்** குடும்பத்தினர் ஏற்றுக் கொண்டனர். இவர்களுக்கு நம் அனைவரின் சார்பாகவும் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். மேலும் காமராஜர் அரங்கின் வாடகையை நன்கொடையாக வழங்கிய திருமதி **மங்கள கௌரி** ஹைதராபாத் அவர்களுக்கும் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். இந்த நிகழ்ச்சி மிகவும் சிறப்பாக நடைபெற நன்கொடை வழங்கிய அனைத்து நல் உள்ளங்களுக்கும் தன்னார்வலர்களும் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

# ஸ்ரீ பகவத் பவனில் நவம்பர் மாதத்தில் 4 நாள் ஞான முகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நான்கு நாள் ஞான முகாம் வருகின்ற நவம்பர் மாதத்தில் சேலத்தில் நடைபெற உள்ளது.

இடம் : ஸ்ரீ பகவத் பவன்,
ஜருகு மலை அடிவாரம்,
கொடம்பக்காடு, பெரிய கவுண்டாபுரம்,
காரிப்பட்டி (Po.) சேலம் - 636 106.

நாள் : **22.11.2018** முதல்
**25.11.2018** ஞாயிறு வரை

நேரம் : வியாழன் மாலை 5.00 மணிமுதல்
ஞாயிறு மதியம் 3.00 மணிவரை

ஞான முகாமில் கலந்த கொள்பவர்கள் வியாழன் மதியமே ஸ்ரீ பகவத் பவன் வந்து தங்கிக் கொள்ளலாம். உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

செலவு பகிர்வு

ரூ. **5000/-** நபர் ஒருவருக்கு

செலவு பகிர்வுக் கட்டணத்தை வழங்க இயலாதவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கலாம்.

அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளன.
- ஞான முகாமில் 50 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

**முன்பதிவு செய்யும் வழிகள்**

| | | |
|---|---|---|
| M.O, D.D. (or) Cheque | : | வரைவோலை அனுப்புபவர்கள் A/c Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம். |
| Direct Payment | : | நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம். **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** |

**ஸ்ரீ பகவத் மிஷன்,** 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3. கைப்பேசி : 9994205880, 97891 65555

## நிகழ்ச்சி நிழல்கள்

### சென்னை காமராஜர் அரங்கில் செப்டம்பர் இரண்டாம் தேதி நடைபெற்ற ஞான முகாம்











# ஜென் கதை

## "விளக்கின் ஒளி"

ஆன்ம சாதகன் ஒருவன் மெய்ப்பொருளை அடைவது தான் தனது வாழ்வின் இறுதியான இலட்சியம் என்று முடிவு செய்திருந்தான். மெய்ப்பொருளை அடைவதற்காக கடுமையான தியானப் பயிற்சிகளில் ஈடுபட்டான். உபநிஷத்துகள், சாஸ்திரங்கள், ஆன்ம விசாரணை நூல்கள் என பலவற்றையும் கற்று வந்தான். நாட்கள் ஓடின, பயிற்சிகள் கூடின. மெய்ப்பொருளை அடைந்ததாக மட்டும் அவன் உணரவில்லை. "விசாரணையால் அன்றி ஞானத்தின் கடைசி கதவு திறக்காது" என்று வாசகம் அவனை வாழும் ஓர் ஞானியை நோக்கி அழைத்துச் சென்றது.

இனி அவனது விசாரணைகள்.

ஞானியிடம் தான் இவ்வளவு காலம் எடுத்து வந்த முயற்சிகளைப் பற்றி கூறிவிட்டு, "நீங்கள் தான் மெய்ப்பொருளை அடைவதற்கு எனக்கு உதவ வேண்டும்" என்று கேட்டுக்கொண்டான்.

சற்று நேரம் அவனை கூர்ந்து கவனித்து விட்டு, "நீ இருப்பதே மெய்ப்பொருளில் தானப்பா" என்றார் ஞானி.

"எனக்கு புரியவில்லையே சாமி, எனக்கு எப்போது நான் என்ற உணர்வு இருந்து கொண்டு தானே இருக்கிறது. நான் என்ற உணர்வு கரைந்தால் தானே மெய்ப்பொருளை அடைய முடியும்" என்றான் சாதகன்.

"இருப்பது மெய்ப்பொருள் மட்டுமே. நான் என்ற தன்மையும் கூட மெய்ப்பொருளின் ஒரு எழுச்சி நிலைதான். இந்த 'நான்' என்ற தன்மை மெய்ப்பொருளில் இருந்து தோன்றி மெய்பொருளிலேயே கரைந்து விடுகிறது. எப்போதும் இருப்பது மெய்ப்பொருள் மட்டுமே. நான் என்ற தன்மை அதில் அவ்வப்போது தோன்றி மறைந்து கொண்டே இருக்கிறது" என்றார் ஞானி.

"ஆனால் எனக்கு எப்போதும் நான் என்ற தன்மை தான் இருப்பது போல் தோன்றுகிறது. நான் எப்படி மெய்ப்பொருளை அடைந்ததாக உணர்ந்து கொள்வது" என்றான் சாதகன்.

"மெய்ப்பொருள் என்பது அடையக் கூடிய ஒரு பொருளோ அல்லது உணரக் கூடிய ஒரு பொருளோ அல்ல. இங்கு பிரித்து அறிவதற்கு எதுவும் இல்லை. நான் என்ற உணர்வு கூட மெய்ப்பொருளின் வெளிப்பாடே" என்றார் ஞானி.

"அப்படி என்றால் நான் மெய்ப்பொருளை அடைய வேண்டும் என்று எந்த முயற்சியும் செய்ய தேவை இல்லையா?" என்றான் சாதகன்.

"மெய்ப்பொருளை அடைய வேண்டும் என்று முயற்சி செய்யும் தோறும் உன்னால் மெய்ப்பொருளை அடையவே முடியாது. நான் என்ற தன்மையை உணரும் நானும் கூட மெய்ப்பொருளின் வெளிப்பாடே. நாம் உணரும் உணர்வு, காணும் தோற்றங்கள் அனைத்தும் மெய்பொருளின் வெளிப்பாடே" என்றார் ஞானி.

"வெளிப்பாடு என்றால் எப்படி புரிந்து கொள்வது. ஏதாவது உதாரணத்துடன் கூறுங்கள்" என்று கேட்டுக்கொண்டான் சாதகன்.

"ஒரு விளக்கு எரிந்து கொண்டு இருக்கிறது என்றால் விளக்கிலிருந்து வெளிப்படும் ஒளியானது தொடர்ந்து தோன்றி மறைந்து கொண்டே இருக்கிறது என்பதுதான் பொருள். ஒளி, தன் மூலத்தை அடைவதில்லை, அடைய வேண்டிய அவசியமும் இல்லை. விளக்கு என்பதே அதிலிருந்து வெளிப்படும் ஒளியையும், விளக்குடன் சேர்த்து அடங்கிய ஒன்றே ஆகும். அதுபோல் "மெய்ப்பொருளின் வெளிப்பாடாகவே நான் என்ற தன்மை இருந்து கொண்டு எப்படி மெய்ப்பொருளை அடைவது" என்றார் ஞானி.

"அப்படி என்றால் நாம் காணும் எல்லாமே மெய்ப்பொருளின் வெளிப்பாடுதானா?" என்று கேட்டான்.

"இந்த பிரபஞ்சத்தில் நீ பார்க்கிற நட்சத்திரங்கள், கோள்கள், சூரிய குடும்பங்கள், என அனைத்தும் ஆகாயத்தில் மிதந்து கொண்டும் உருண்டு கொண்டு சுற்றிக் கொண்டே இருக்கின்றன. இவை அனைத்தும் மெய்ப்பொருளின் வெளிப்பாடே தவிர வேறு ஒன்றும் இல்லை. அதுபோல் உனது உடலில் நீ பிறந்தது முதல் நீ இறக்கும் வரை உடலின் ஒட்டுமொத்த அக இயக்கமும், மன இயக்கமும் மெய்ப்பொருளின் வெளிப்பாடே" என்றார் ஞானி.

மின்னல் வெட்டியது போல் அவனுக்கு புரிதல் ஏற்பட்டது. அவனுள்ளே மெய்ப் பொருளைத் தேடும் நான் என்ற தன்மை பலமிழந்து அவன் மெய்ப்பொருளின் அங்கமாகவே இருப்பது தெரியாமல் இருந்து கொண்டு கொண்டிருந்தான்.

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698
Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555